ஸ்ரீ

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – ஆனி – ஆடி

2020 – ஜுன் – ஜுலை

ஸ்ரீ நாச்சியப்பர் மாண்டிஸோரி பள்ளி

பொறவாச்சேரியில் கோவிலூர் மடாலயம் நடத்தும் ஸ்ரீ நாச்சியப்பர் மாண்டிஸோரிப் பள்ளி
மாணவச் செல்வங்கள் ஆசிரியர்களுடன்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – ஆனி, ஆடி
2020 – ஜுன், ஜுலை இதழ் – 96, 97

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




மாமேவு கோகனகம் அரும்பல்மல
ருதல்குவிதல் மருவத் தோயாத்
தூமேவு பரிதியெனத் தன்முனர்முத்
தொழில் நடப்பத் தோயாது ஆன்றோர்
பாமேவும் இடங்கொள்வன்னி இரண்டலமூன்
றெனஅமரர் பரவ மேவும்
கோமேவு வன்னிவனக் கொற்றவாள்
ஈசர்பதம் குறித்து வாழ்வாம்.

– கோயிலூர்ப் புராணம்

*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

## *சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்*

இன்றைய காலகட்டத்தில் உலகளவில் பரவி மனித இனத்திற்குப் பெரிய பாதிப்பை எல்லா வகையிலும் மிகுந்த சிரமங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கின்ற கொரோனா வைரஸ் பரவலைத் தள்ளவும் முடியாமல், கொள்ளவும் முடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பாக மனித இனத்தைத் தவிக்க வைக்கிறது.

கடந்த நான்கு மாதங்களாக நம்மைக் கட்டாய ஓய்விற்கு ஆளாக்கி இருக்கின்ற கொரோனா வைரஸ் பரவல் பல சிரமங்களைக் கொடுத்தாலும் சில எதிர்பாராத, மற்றபடி அடைய முடியாத நன்மைகளையும் கொடுத்திருக்கிறது.

இந்தப் பாதிப்பினால் நம்மைப் போன்ற முதியவரும் இளம் குழந்தைகளும் அதிகமாகச் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறோம். முதிய வயதிலும் சுறுசுறுப்பாகவும் சுயகர்மங்களைச் செய்து வந்த நம் போன்றவர்கள் மிகுந்த உடல் நலப் பாதிப்பும், மனச் சலிப்பும் அடைகிறோம். அதேபோல் ஓரிடத்தில் உட்கார்ந்தே அறியாத மழலைச் செல்வங்களை ஓர் அறைக்குள் போட்டுப் பூட்டி வைத்தது போல வைத்திருப்பது குழந்தைகளுக்கு மன ரீதியாகப் பாதிப்பை ஏற்படுத்தி உள்ளது. பெற்றோர்கள், மூத்தவர்கள் யாவரோடும் வாதாடவும், சண்டையிடவும் வைக்கிறது. அதிலும் உடலில் சில இயலாமைகளைக் (special children) கொண்ட குழந்தைகள் மிகவும் பாதிக்கப்பட்டு அடக்க முடியாத அலறல்கள், கதறல்கள், கண்டதைத் தூக்கி எறியும் இனம் புரியாத சினம் அனைத்தாலும் குழந்தைகள் அவதிப்படுகிறார்கள். பெற்றோர்களும் மன அமைதி இழந்து செய்வது அறியாது தவிக்கிறார்கள்.

இந்தச் சூழ்நிலையில் சில நல்ல உள்ளங்கள் இந்தக் குழந்தைகளுக்கு சிறப்பு வகுப்புகளைக் காணொலி மூலம் நடத்தி அவர்களை அமைதிப்படுத்துகிறார்கள். நம் கோவிலூர் பார்வை புனர்வாழ்வு மையத்திலும் காணொலிச் செய்திகள் வகுப்புகள் நடத்துகிறார்கள். அத்துடன் அறிவையும் செயல்பாடுகளையும் வளர்க்கிறார்கள். அப்படிப்பட்ட நல்ல சிறப்பான ஆசிரியர்களுக்கு நம்முடைய மனமார்ந்த பாராட்டுக்கள், வாழ்த்துக்கள்.

பள்ளிகள் மூடிக்கிடப்பதனால் குழந்தைகள் துவண்டு கிடக்கிறார்கள். அவர்களை இயல்பான சுறுசுறுப்பிற்குக் கொண்டு வருவதற்காகப் பல கல்வி நிறுவனங்கள் இணைய வழிக் கல்வியைத் தொடங்கி மிக அருமையாக நடத்தி வருகிறார்கள். நம்முடைய இரண்டு பள்ளிகள் மற்றும் மூன்று கல்லூரிகளும் இணைய வழிக் கல்வியை மிகச் சிறப்பாக நடத்தி மாணவர்களைத் தொடர்ந்து ஊக்கப்படுத்தி வருகிறார்கள்.

இந்த இணைய வழிக் கல்வியிலே பங்கேற்கும் குழந்தைகள் அவர்கள் பதிவு செய்யும் பதில்களை எழுத்து வகையிலும், ஒளிப்பதிவு மூலமாகவும் ஆசிரியப்பெருமக்களுக்கு அனுப்புகிறார்கள். அதில் வருகின்ற சில பதில்கள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து இரு பள்ளி முதல்வர்களும் நமக்கு அனுப்பி வைக்கிறார்கள்.

உண்மையிலேயே அந்த மழலைச் செல்வங்களும், இளைய மாணவர்களும் அனுப்புகின்ற பதில்களைப் படித்தும் கேட்டும் நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்திருக்கிறேன்.

அதிலும் குறிப்பாக, தமிழ்ச் செய்யுள்களை மழலைக் குரலில் ஒப்புவிப்பது மிகவும் இனிமையாகக் காதில் அமிர்தம் பொழிந்ததுபோல உணர்கிறேன்.

பெரும்பாலான ஆசிரியர்கள் மிக அருமையாக, தெளிவாக, குழந்தைகள் நன்கு புரிந்து கொள்ளும் வண்ணம் நடத்துகிறார்கள். குழந்தைகளும் தவறாமல் ஆர்வமாகக் கற்று விடை எழுதுகிறார்கள். வீட்டுப் பாடங்களையும் முறையாக, காலம் தவறாமல் செய்கிறார்கள். இவை அனைத்தும் நஷ்டத்தில் லாபமாக நடந்து கொண்டு இருக்கின்றன. இடைப்பட்ட காலத்திலும் ஓரளவு பயனுள்ளதாகக் கழிந்து, அறிவும், நம்பிக்கையும் விருப்பமும் அதிகப்படுகிறது. இவ்வாறு தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு இணையவழி வகுப்புகளை நடத்துகின்ற அனைத்து ஆசிரியர்களுக்கும் நமது மனமார்ந்த நன்றிகள், பாராட்டுகள், ஆசிர்வாதங்கள்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

# சசிவன்ன போதம்

## நூல் முன்னுரை

**(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)**

சசிவன்ன போதம் என்பது சசிவன்னன் என்கிற கொடூரன் ஞானம் பெற்ற கதையைக் கூறும் நூலாகும். சசி என்றால் வெண்மை, வன்னம் என்றால் நிறம், போதம் என்றால் ஞானம்; பலவிதமான ஈனச் செயல்களாலும் தீய நடவடிக்கைகளாலும் வெள்ளை நிறம் வரக்கூடிய பெருநோயைப் பெற்றவன். தான் சரணடைந்த ஞானியின் அருட்பார்வையாலும் (நயன தீட்சை) அவருடைய கரத்தால் தொட்டு ஆசீர்வதிக்கப் பெற்ற கருணையாலும் (ஸ்பரிச தீட்சை) அவரிடமிருந்து பெறப்பட்ட அருள்மொழிகளாலும், நெறிமுறைகளாலும் (உபதேச தீட்சை) தொடர்ந்து வழி நடந்து அவருக்கு உடல் பொருள் ஆவி அனைத்தாலும் சேவை செய்து நல்ல சீடனாக மாற்றம் பெற்று அவருடைய பூரண அருளைப் பெற்றதனாலே அஞ்ஞானம் விலகி ஞானம் பெற்றுப் பரம்பொருளை உணர்ந்து, அனுஷ்டித்து, மோட்சம் பெற்ற கதை.

சாஸ்திரங்களின் மரபு பிறழாமல் முறைப்படி கடவுள் வாழ்த்து, நூலின் கருத்து, நூலின் பயன், நூல்களைப் படிப்பதனால், கேட்பதனால் ஏற்படும் அருள் இவற்றை முதலில் சொல்கின்றது. தமிழிலே இப்பகுதியைப் பாயிரம் என்று அழைப்பார்கள். பாயிரம், முறையாக, கடவுள் வாழ்த்து அல்லது குருவாழ்த்து (நமஸ்கார மங்கலம்) சாஸ்திரம் சொல்லக்கூடிய கருத்துகளைக் கோடி காட்டுதல். (வஸ்து நிர்தேஷமங்கலம்) இந்த சாஸ்திரத்தை படிப்பதனால், கேட்பதனால் ஏற்படும் மேன்மை கூறல் (ஆசீர்வாத மங்கலம்) மற்றும் அவையடக்கம் ஆக நான்கு விஷயங்களை எடுத்துக்கூற வேண்டும்.

*கடவுள் வாழ்த்து*

மதிபருதி எரிநீர்கால் வான் அவனி
இயமானன் வடிவாய் எல்லா
அதிபதியாய் அனைத்தும்ஆய் அல்லாத
அறிவுருவை அகத்துள் வைப்பாம்

சொல்லால்தம் மதிவிரகால் தூயதுஇது
தீயதுஇது என்னும் மாக்கள்
எல்லார்க்கும் அதுஅதுஆய் இறைஇருக்கும்
படியேயாய் இருக்க என்றே

இரண்டு பாடல்களும் தொடர் கவிகளாகும் (குளகம்); முதல் பாடலிலே சந்திரன், சூரியன், வானம், காற்று, அக்கினி, நீர், பூமி, ஜீவ ஆன்மா (ஜீவர்கள்) ஆகிய எட்டு விஷயங்கள் சேர்ந்த அஷ்டமங்கல மூர்த்தமாய் எங்கும்நிறைந்த யாவற்றிற்கும் அதிபதியான ஞானவடிவை, பரம்பொருளை எப்போதும் மனத்துள் வைத்து வணங்குவாம்.

ஸ்ருதி, ஸ்மிருதி, புராணம், இதிகாசம், முன்னோர் கூறி இருக்கும் நூல்கள் அனைத்தும் கற்றுப் பெற்ற அறிவாலும் தங்களுடைய சுய அறிவின் திறத்தாலும் இவை நல்லவை, மற்றவை தீயவை, என்னும் விவேகம், ஜீவர்கள் எல்லோருக்கும் அவரவர் பின்பற்றுகிற தத்துவங்கள், மதக் கருத்துகள், அவரவர் விருப்பப்படி அந்தந்த மதங்களாகவே இருக்கும் என்று அறிவோமாக.

கருத்து

மேலே குறிப்பிட்டுள்ள இரண்டு கண்ணிகள் மட்டுமே பாயிரமாக இந்நூலில் சொல்லப்பட்டுள்ளன. இந்த இரண்டு பாடல்களும் நமஸ்காரமங்கலம் – இறை வணக்கம் என்ற பகுதியில் அடங்கும்.

நூலின் தொடக்கத்திலே சந்திரன், சூரியன் என்று இயற்கைத் தெய்வங்களையும் ஐம்பூதங்களாகிய தேவதைகளையும் ஜீவாத்மா என்ற பரம்பொருளின் சொரூபத்தையும் ஆகிய எட்டு மங்கலங்களையும் (அஷ்டமங்கலம்) வணங்கி அவற்றினுடைய அருளாலே இந்த நூல் எநதவித விக்கினமுமின்றி நிறைவு பெற வேண்டும், முமூட்சுகளுக்குப் பயன்தர வேண்டும் என்ற நல் எண்ணத்தோடு தொடங்குகிறார் தத்துவராய சுவாமிகள். நூலில் சொல்லப்படப் போகும் செய்திகள் வேதாந்தத் தத்துவங்களே என்பதனால் பரம்பொருளை வணங்குவது சரியான இலக்கிய மரபு.

## நூல் தொடக்கம்

தத்துவராய சுவாமிகள் சசிவன்ன போதம், அஞ்ஞவதைப்பரணி ஆகிய இரண்டு நூல்களிலும் அஞ்ஞானம் அகன்று ஞானத்தை உணர்வதைப் பற்றியே வலியுறுத்திச் சொல்கிறார். இரண்டு நூல்களிலும் அஞ்ஞானத்தைப் பேய்களாக (அலகைகளாக) உவமித்து அந்த அஞ்ஞானப் பேய்களை ஞான ஒளியாலே விரட்டுவதாகப் பேசுகிறார். முதல் ஐந்து பாடல்களும் (பேய்கள் காளிமாதாவிடம் முறையிட்டுப் புலம்பும் வார்த்தைகள்) எங்களுடைய பாவகாரியங்களாலே பேய்களாகப் பிறப்பெடுத்து ஆவிகளாக இருளிலே அலைகின்ற எங்களுக்கு விடிவுகாலம் பிறக்குமா? பரம்பொருள் அருள் சித்திக்குமா? அஞ்ஞானம் விலகி ஞானம் பெறும் வாய்ப்பு எங்களுக்குக் கிட்டுமா? என்று எல்லாம் வல்ல காளிமாதாவின் திருவடிகள் பணிந்து அழுது புலம்பி வேண்டி நின்றன. அவைகளின் புலம்பலைக் கேட்டுக் கருணையே உருவான காளிமாதா எப்படிப்பட்ட பாவத்தைச் செய்திருந்தாலும் தவறை உணர்ந்து பரம்பொருளை நினைத்து வருந்தி இரந்து கேட்கில் மோட்சம் பெற முடியும். இதனை ஒரு வரலாற்றின் வழியே உங்களுக்குச் சொல்வேன் என்று தொடங்குகிறார்.

1. முடிவும் ஆதியும் அற்ற முழுமுதல்
   வடிவமாகி வரும்படி எங்ஙனே?
2. சொல்லு கோலமோ கருதி விருத்தமோ
   அல்லவோ என அன்னை அருளுமே
3. அருவன் ஆயினும் அன்பர்க்(கு) உருவனாய்
   வருவன் என்பது மாமறை சொல்லுமே
4. புத்தி யாம்வலை யில்படும் பார்மிசை
   பத்தியாலறி யொண்ணாப் புராணனே
5. தேவி இப்படிக் கூறத் திருவருள்
   பாவி யேற்கு இலம் என்று பதைக்கவே.

தங்கள் வழிபடும் தெய்வமாகிய காளிமாதாவை வணங்கி ஆதியும் அந்தமும் இல்லாத பரம்பொருள் ஒரு வடிவம் தாங்கி வருவது எதற்காக?

அவ்வடிவம் வேத இதிகாசங்களில் சொல்லப்பட்டவைக்கு அப்பாற்பட்டவையோ என்று அழுது புலம்பின. இதனைக் கேட்டுக் கருணையுடன் காளிமாதா அருள் சுரந்து சொல்லத் தொடங்கினாள்.

உருவமற்றவனாகப் பரம்பொருள் இருந்தாலும் அன்பர்களுக்கு உதவுவதற்காக ஓர் உருவம் தாங்கி வரும் என்பது வேதங்கள் சொல்கின்ற உண்மையாகும்.

பரம்பொருள் வசம் பக்தி கொண்டு அதனைப் பாடிப் பரவசம் அடைந்து திருவடிகளில் சரணடைந்தால் பரம்பொருள் நம்முடைய பக்தி வலையில் அகப்படும். உலகத்தில் உள்ளவர்கள் பரிபூரணமான பரம்பொருளை எக்காலும் அறிவால் அறிய இயலாது. ஆனாலும் தொடர் விசாரம் பரம்பொருளை நமக்கு உணர்த்தி நாம் அனுபவிக்கச் செய்து ஞானத்தைப் பெறச் செய்யும்.

காளிமாதா இவ்வாறு கூறவும் பேய்கள் பதறி அழுது எங்களைப் போன்ற பாவிகளுக்கு ஞானம் பெறுவதும் மோட்சம் அடைவதும் கிடைக்காமல் போய்விடுமோ என்று பதைத்து அழுதன.

6. அலகை அச்சம் அறஅக வான்களும்
   உலகில் முத்தி பெறும்பரிசு ஓதுவாம்

இப்படிப் பதைபதைத்து அழுத அலகைகளுக்கு ஆறுதலாக எப்படிப்பட்ட பாவிகளும் முக்தி பெற இயலும்; ஒரு வரலாறு மூலம் இதனை உங்களுக்கு விளக்குவேனாக என்று கூறி ஆறுதல் அளித்தாள்.

7. புணர்ந்த பாவம் எலாம்பரி பூரணம்
   உணர்ந்த ஞானி விழிபட ஓடுமே.

காலம் காலமாகப் பூவுலகில் பல கருமங்களைச் செய்து அதன் வழியாகச் சேர்த்து வைத்த பாவங்கள் எல்லாம் ஒரு உண்மையான பரிபூரண ஞானத்தை அடைந்து உணர்ந்து அனுபவித்த ஞானியின் அருட்பார்வை கிடைக்கப் பெற்றால், செய்த அத்தனை பாவங்களும் பறந்து ஓடிவிடும். மீண்டும் நம்மைச் சேராது. ஞானிகளுக்கு நான்கு

குணங்கள் மிக முக்கியமாகும் என முன்னோர் நூல்களில் சொல்லப்பட்டுள்ளன. மைத்திரை, கருணை, முஜிதை, உபேட்சை. மைத்திரை என்பது எல்லா ஜீவன்களிடமும் நட்புப் பாராட்டுவதும் தம் அன்பிற்கு உரியவர்களாக ஏற்றுக்கொள்வது. கருணை எல்லா ஜீவன்களிடமும் கருணையுடன் நடந்து கொள்வது; அவர் தம் துன்பங்களை, துயரங்களைத் தம்முடையதாகக் கொண்டு தீர்ப்பதற்கு உதவ முயல்வது உதவிகளைச் செய்வது. முஜிதை எல்லா ஜீவர்களிடத்தில் அவர்தம் நற்கருமங்களைக் கண்டு மகிழ்வது, பாராட்டுவது. உபேட்சை எல்லா ஜீவர்களிடத்தும் விருப்பமும் பண்பும் கொண்டு வாழ்தல்.

8. எழிலாரும் ஞானி புகழ் என்னை கூற
உயர்வீடு இவன்சொல் வழிசெய்
தொழிலாளர் சேர்க்கை அதுகேளும் முன்னை
இதிகாசம் ஒன்று சொலவே

எப்படிப்பட்ட ஞானியின் அருட்பார்வை கிட்டினால் பாவம் போகும் என்று கேட்பீரானால் ஞானியினுடைய பெருமையை, மேன்மையை எவ்வாறு கூற இயலும். ஞானி என்பவர் கருணை, பக்தி, வைராக்கியம், பிரம்ம ஞானம் அனைத்தும் சேர்ந்த நல்லவர். மாசு மருவற்றவர்; மூவகைத் துன்பங்களைக் (தாபங்கள்) கடந்து பரம்பொருளின் சொரூபமாகத் திகழ்பவரே பிரம்ம ஞானி என்று கருதப்படுவார்.

மூவகைத் துன்பங்கள் :- அத்யான்மிகம் - வாத - பித்த - சிலேத்தும ஏற்றத்தாழ்வினால் உடலில் ஏற்படும் பலவகையான நோய்களின் துன்பங்கள். ஆதிபௌதிகம் - பிற உயிர்களாலாவது, திருடன், பாம்பு, தேள் முதலிய உயிர்களால் வருகின்ற துன்பங்கள். ஆதி தெய்விகம் - பூகம்பம், புயல், இடி, மின்னல், மழை முதலிய துன்பங்கள்; மூன்றும் தூல உடலைத் தாக்குபவை.

*(தொடரும்...)*

# கம்பராமாயணம்

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

கொரோனா வைரஸ் பரவல் காரணமாக ஊரடங்கு விதிகளாலே மனமும், மெய்யும் தளர்ந்து ஒடுங்கிக் கிடந்த நமக்குக் காலைக் கதிரவன் ஒளிபோல, விடியல் போல மனதிற்கு உற்சாகத்தையும் தெம்பையும் அளித்து மீண்டும் சுறுசுறுப்பாக இயங்கச் செய்தவை மூன்று.

முதலாவதாக, கடந்த ஏப்ரல் மாதம் முதல் காணொலி மூலம் இளம் குழந்தைகளுக்கும், சிறுவர்களுக்கும், இளைஞர்களுக்கும் பாடம் நடத்தி மனத்தெம்பையும் நம்பிக்கையையும் அளித்து வருகின்ற நம்முடைய கல்வி நிறுவனங்களில் நடத்தி வருகின்ற காணொலி வகுப்புகள்.

இரண்டாவதாக சுவாமி வேதாந்தானந்தா மகராஜ் நடத்தி வருகின்ற தொடர் சொற்பொழிவுகள். வேதாந்த சாஸ்திரங்களில் சிறந்ததாகக் கருதப்படுகின்ற கைவல்ய நவநீதத்தினுடைய முதல் பகுதியான தத்துவ விளக்கப்படலத்தைக் கடந்த இரண்டு மாதங்களாக நிகழ்த்தி வருகிறார்கள். அதனைக் கேட்டதனாலே நமக்கும் மகிழ்ச்சி ஏற்படுகிறது.

மூன்றாவது கம்பராமாயணத்தை முழுமையாக, பாயிரத்தில் இருந்து இறுதிவரை ஒவ்வொரு படலமாக நடத்துகின்ற மகத்தான காரியத்தைக் காரைக்குடி கம்பன் கழகம் கடந்த மூன்று மாதங்களாக நடத்தி வருகிறது. இதுவரை நடத்திய பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம் ஆகிய மூன்றும் முடிந்து தற்பொழுது நான்காவது காண்டமாகிய கிஷ்கிந்தா காண்டம் நடத்தி வருகிறார்கள். இதனைக் காணொலிக் காட்சி (You Tube) மூலம் நாம் கண்டு கேட்டும் ரசித்தும் வருகிறோம்.

மேலே கூறிய மூன்றின் விளைவாக நம் மனதிலும் சோம்பல், தளர்ச்சி விலகிச் செயல்படுவது பற்றி சிந்திக்கத் தொடங்கியுள்ளோம். அதன் பயனாக ஏறக்குறைய ஒன்றரை ஆண்டுகளாக இடையில் நிறுத்தப்பட்ட ஞானவாசிட்ட சாஸ்திரத்தைக் காணொலிக் காட்சி

(You Tube) மூலம் நடத்துவது என்று தீர்மானித்துச் செயல்பட்டு வருகிறோம். இறைவன் அருள் கிட்டுமேயாகில் 2021 பிப்ரவரி, மார்ச் மாதத்திற்குள் ஞானவாசிட்டம் முழுவதுமாகப் பூர்த்தி செய்வோம்.

இதன் மூலம் கோவிலூர் மரபு வேதாந்தப் பாடங்கள் அனைத்தும் - 16 பாடங்களையும் முறையாக நடத்தி முடித்த சிறப்புக் கிடைக்கும். எட்டாவது பட்டம் சோமசுந்தர சுவாமிகள் காலத்திற்குப் பின்பு 1971-லிருந்து கோவிலூர் வேதாந்த மரபுப் பாடங்களை நடத்தத் தொடங்கி முழுவதுமாக முடித்த மடாதிபதி என்ற சிறப்பும் நம்மைச்சேரும். பரம்பொருள் அருள்வாராக.

அடுத்து, கம்பராமாயணத்தை ஆதிமுதலில் இருந்து படிக்கத் தொடங்கினோம். இது வரையில் கம்பனைப் பற்றிய சொற்பொழிவு, பட்டிமன்றம், கவியரங்கம் அனைத்தையும் கேட்டு இருக்கிறோம். ஆனால் இராமாயணத்தை முழுவதுமாகப் படித்தால் என்ன என்று ஒரு விருப்பம் தோன்றியது. அதன் வழியாக அண்ணாமலை பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள கம்பராமாயண உரை நூல்களையும், சமீபத்தில் பள்ளத்தூர் பழ.பழனியப்பன் அவர்கள் வெளியிட்ட கம்பராமாயண உரை நூல்களையும், கோவை கம்பன் என்று அழைக்கப்பட்ட திருமிகு. பி.ஜி. கருத்திருமன் அவர்கள் எழுதிய கம்பர் கவியும் கருத்தும் என்ற 1000 கம்பர் பாடல்களைக் கொண்ட இராமாயணம், அடுத்து, கம்பர் அடிசூடி பழ.பழனியப்பன் எழுதிய கம்பராமாயணம் சுருக்கம் 6 பகுதிகளாக வெளியிடப்பட்ட கையடக்கப் பதிப்பு, டி.ஆர். இராமநாத சாஸ்திரி எழுதிய மூவர் இராமாயணம் (வால்மீகி, துளசிதாசர், கம்பர்) என்ற நூல், மூதறிஞர் இராஜாஜி எழுதிய இராமாயன காவியம் ஆகிய நூல்களைப் படிக்கத் தொடங்கியுள்ளோம். இதுவரை பாலகாண்டத்தைப் படித்துள்ளோம்.

இப்படிப் படிக்கின்ற காலத்தில் ஒரு எண்ணம் தோன்றியது. நாம் படிப்பதை நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களுடன் பகிர்ந்து கொண்டால் நமக்கும் கற்றது மனதில் பதியும். நாம் எழுதியதைப் படிப்பவர்களுக்குக் கம்பராமாயணத்தைப் பற்றி அடிப்படையாகச் சொல்லப்பட்ட செய்திகள், கதாபாத்திரங்கள் ஆகியவற்றைப் பற்றி அவர்களும் தெரிந்து கொள்ள முடியும். தொடர்ந்து ஆழமாக அவர்கள்

கற்பதற்கும் வாய்ப்புக்கள் ஏற்படலாம் என்ற எண்ணத்திலே கம்பராமாயணத்தைப் பற்றிய கட்டுரைகள் எழுதலாம் என்று எண்ணினோம்.

கம்பரைப் பற்றி அறிந்து ஆழங்கால் பட்டவர்கள் தெரிவிக்கின்ற கருத்துக்களைப் போல், கம்பனைப் பற்றி நிறைய எழுதி உள்ள பேராசிரியப் பெருமக்கள் எழுத்துக்களைப் போலவும் நாம் எழுதுவது இருக்க வாய்ப்பில்லை. கம்பராமாயணக் கடலில் மூழ்கித் திளைக்கவோ, நீந்திக் கடக்கவோ நாம் முயவில்லை. கரையில் நின்று கம்பர் கடலைப் பரப்பளவில் பார்ப்பதாகவும், ரசிப்பதாகவும் எண்ணுகிறோம். இந்த எண்ணத்தில் நாம் கம்பராமாயணம் பற்றிய சில கட்டுரைகளை எழுத முயல்கிறோம்.

நாம் எழுதுவதைச் சான்றோர் எழுதியவற்றோடு ஒப்பிட்டுப் பார்க்கவோ விமர்சனம் செய்யவோ அவசியமில்லை. இது கத்துக்குட்டி மற்றொரு கத்துக்குட்டியுடன் உரையாடுவதாகவே கருத வேண்டுகின்றேன். ஆறாம் வகுப்பு மாணவன் ஐந்தாம் வகுப்பு மாணவனுக்குப் பாடம் நடத்துவது போலத்தான் நான் நினைக்கிறேன்.

## பாலகாண்டம்

கம்பராமாயணத்தினுடைய தொடக்கமானது பாலகாண்டம். பாலகாண்டத்தில் 23 படலங்கள் 1312 பாடல்கள் உள்ளன. அவற்றிலே முக்கியமான படலங்கள் திருஅவதாரப் படலம், கையடைப் படலம், அகலிகைப் படலம், கடிமணப் படலம் ஆகியவையே. இந்தப் பாலகாண்டத்திலே பங்கு கொள்கின்ற மாந்தர்கள் தயரதன், கோசலை, கைகேயி, சுமித்திரை, இராமன், பரதன், இலக்குவன், சத்துருகணன், வசிஷ்டர், விசுவாமித்திரர், கலைக்கோட்டு முனிவர், தாடகை, அகலிகை, ஜனகன், சீதை ஆகிய கதாபாத்திரங்கள் ஆகும்.

## கதைச்சுருக்கம்

கோசல நாட்டின் மன்னனாகிய தசரதன் சூரிய வம்சத்தினுடைய வாரிசு. மிகப் புகழ்பெற்ற சிபிச்சக்ரவர்த்தி பகீரதன் ஆகியவர்களின் பின்தோன்றலாகிய மேன்மை படைத்தவன். தசரத சக்கரவர்த்திக்கு மூன்று பட்ட மகிஷிகள் இருந்தனர். 60000 உறவு முறைப் பெண்டிர்

இருந்தனர்(அந்தப்புரத்துக்கு மகளிர்கள், மனைவியர் என்று பழைய வரலாறுகள் சொல்லுகின்றன. கம்பனும் அதைக் குறிப்பிடுகிறான்.) அப்படி இருந்தும் நீண்ட காலமாகத் தசரதனுக்குக் குழந்தைகள் இல்லாமல் மன வருத்தம் அடைந்து இருந்தான். அச்சமயம் குலகுருவான வசிஷ்ட முனிவரின் ஆலோசனையின் வண்ணம் உரோமபத நாட்டில் உள்ள ரிஷ்ய சிருங்கன் என்ற கலைக்கோட்டு முனிவரை(மான் கொம்புகள் தலையில் முளைத்தவர்) அழைத்து அவருடைய தலைமையில் அசுவமேதயாகமும், புத்ரகாமேஸ்டியாகமும் நடத்தினார். அந்த யாகங்களின் பிரசாதமாகக் கிடைத்த பாயாசத்தைத் தசரதனிடம் கொடுத்து இதனை உன்னுடைய மனைவியருக்கு முறைப்படி பகிர்ந்து அளிப்பாயாக என்று சொல்ல அவ்வண்ணமே பாயாசத்தை அருந்திய கோசலை, கைகேயி, சுமித்திரை மூவரும் இராமன், பரதன், இலக்குவன், சத்ருகணன் என்று நான்கு மக்களைப் பெற்றனர். திருஅவதாரப் படலத்தில் குழந்தைகள் பிறந்ததைச் சொல்லிய கம்பன் அடுத்த கட்டமாக வசிஷ்ட முனிவரிடம் அரச குமாரர்கள் கல்வியிலும் கலையிலும் வீர வித்தைகளிலும் பயிற்சி பெற்றார்கள் என்று இரத்தினச் சுருக்கமாகச் சொல்லிமுடித்தார்.

இதன் காரணமாகத் தசரத குமாரர்களுடைய சிறுவயது விளையாட்டு, குறும்பு அதனால் பெற்றோர் பெற்ற மகிழ்வு, குழந்தைகளைத் தாயார் சீராட்டி வளர்த்தது என்று எதையுமே கம்பன் பாடவில்லை. 10000 க்கும் மேற்பட்ட கவிதைகளை எழுதிய கம்பன் அரச குமாரர்களின் பாலபருவத்தைப் பற்றி எழுதாதது கம்பர் அன்பர்களுக்கு எப்பொழுதும் ஒரு குறையாகவே உள்ளது. அந்தக் குறைகளைக் குலசேகர ஆழ்வாரும், பெரிய ஆழ்வாரும் இராமர் லீலைகளையும், கண்ணன் லீலைகளையும் பாடி அன்பர்களை மகிழ்வித்தார்கள்.

வசிஷ்ட முனிவரிடம் அனைத்துக் கலைகளையும் வில் வித்தை, வாள் வித்தை, குதிரை ஏற்றம், யானை ஏற்றம் ஆகிய அரசகுமாரர்களுக்குரிய அனைத்தையும் கற்றுத் தேர்ந்தார்கள். அதன் பின்னர் சற்றே வித்தியாசமான புண்ணிய ஸ்தலங்களுக்கும் புண்ணிய நதிகளுக்கும் சென்று இறைவனை வணங்கி நீராடித் திரும்பினார்கள்.

இந்தச் சமயத்தில் விசுவாமித்திரர் என்ற பிரம்ம ரிஷி தசரதனிடம் தன்னுடைய வேள்விகளைக் காப்பதற்கு உன் மூத்த மகன் இராமனைத் தர வேண்டும் என்று வேண்ட முதலில் மறுத்த தசரதன் விசிஷ்டர் அறிவுரைப்படி இராமனையும் இலக்குவனையும் முனிவருடன் அனுப்பி வைத்தார்.

வனத்தில் முனிவருடைய யாகத்தைச் சீர்குலைக்க வந்த தாடகை அவளுடைய மக்கள் மாரீசன், சுபாகு அனைவரும் இராமனுடைய அம்பாலே மாண்டனர். அதன்பின்னர் முனிவர் சிறப்பாக வேள்விகளை முறைதவறாத வண்ணம் செய்து முடித்தார்.

ஜனக மன்னரிடம் இருந்து சீதையின் சுயம்வர ஓலை வந்ததைத் தொடர்ந்து அரச குமாரர்களை அழைத்துக் கொண்டு மிதிலாபுரிக்குச் சென்றார். செல்லும் வழியிலே கௌதம முனிவரின் ஆசிரமத்தில் கல்லாக இருந்த அகலிகை இராமரின் திருமலர்ப் பாதத்துகள் பட்டுச் சாபம் விலகப் பெற்று மீண்டும் தோன்றினாள். அகலிகையைக் கௌதம முனிவருடன் சேர்த்து வைத்துப் பின்னர் மிதிலைக்குச் சென்றனர். அரண்மனை போகும் வழியில் மேல்மாடத்தில் நின்ற சீதையைக் கண்டு காதல் உற்றார் இராமர். பின்னர் விசுவாமித்திரர் தசரதனையும் சூரியகுலப் பெருமையையும் இராமனுடைய வீரத்தையும் பற்றி ஜனகருக்கு விரிவாகக் கூறி இராமரைச் சுயம்வரப் போட்டியில் கலந்து கொள்ளச் செய்தார். போட்டியின் விதிப்படி இராமர் சிவதனுசை எடுத்து வளைத்தார். சிவதனுசு இற்று விழுந்தது. இவ்வாறாக, சுயம்வரப் போட்டியில் வெற்றி பெற்று இராமர் சீதையைக் கைத்தலம் பற்றினார். விசுவாமித்திரர் ஜனகரிடம் கலந்து பேசி மற்ற மூவருக்கும் திருமணம் பேசி முடித்தார். பரதனுக்கு மாண்டவியையும், இலக்குவனுக்கு ஊர்மிளையையும்,சத்ருகனுக்கு சுருதகீர்த்தியையும் மணம் செய்து வைத்தார்.

மணவிழாக்கள் நடந்து முடிந்த பின்னர், தசரத மன்னர் மனைவியர் மக்கள் மருமக்களோடு கோசல நாடு நோக்கிப் புறப்பட்டார்.

வழியிலே பரசுராமன் என்ற அந்தண முனிவர் வழிமறித்து "பழமையான இற்றுப் போன சிவதனுசைத் தான் நீ முறித்தாய்.

என்னிடம் விஷ்ணுவின் தனுசு உள்ளது; அதை நீ வளைத்து நாண் ஏற்ற வேண்டும். இல்லையென்றால் என்னுடன் போர் இட்டு மடிய வேண்டும்" என்றார். உடனே இராமர் விஷ்ணு தனுசை வளைத்து நாண் ஏற்றி அம்பைத் தொடுக்கத் தயாரானார். பரசுராமனிடம் இந்த அம்பிற்குப் பதில் என்ன என்று கேட்க நான் இது காலம் வரை பெற்ற தவ வலிமையை அம்பிற்கு இலக்காக அளித்தேன் என்று சொல்லித் தோல்வியை ஒப்புக் கொண்டு மறைந்து போனார். பிறகு தசரத சக்ரவர்த்தி தன் உறவுக்காரர்களுடனும் சேனைகளுடனும் அயோத்தி நகருக்கு வந்து சேர்ந்தார்.

பாலகாண்டத்தைப் பொறுத்த மட்டில் மிக முக்கியமான கதை நாயகர்களைத் தவிர்த்து மூன்று குணசித்திரப் பாத்திரங்கள் பற்றி அறிந்து கொள்வது அவசியம் என்று நான் கருதுகிறேன். சுமித்திரை, விசுவாமித்திரர், அகலிகை ஆகிய மூன்று பாத்திரங்களும் பாலகாண்டத்தின் ஆரம் போன்றவர்கள்.

*(தொடரும்...)*

## வழிகாட்டும் வாழ்க்கை

(முனைவர். மு.பழனியம்மாள், உதவிப் பேராசிரியர் - தமிழ்த்துறை)
நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

மனிதர்கள் ஒருவருக்கொருவர் உருவத்தால் வேறுபடுவதைப் போல உள்ளத்தாலும் வேறுபடுகின்றனர். அவர்களின் இலட்சியமும் அடைய வேண்டிய இலக்கும் மாறுபட்டு உள்ளன.

மனிதன் தன்வாழ்வை எத்தனையோ வகைகளில் பொருள் பொதிந்ததாக மாற்றிக் கொள்ள முடியும். அது குறிப்பிட்ட படிப்பினாலோ, பணியினாலோ, வாழ்க்கை இணையினாலோ மட்டுமே நிர்ணயிக்கப்படுவதில்லை. இலக்கை மனதில் வைத்து இயக்கத்தை மேற்கொள்வது நன்றுதான். ஆனால், அது நிறைவேறாத போது அடுத்த துணை இலக்கை ஏற்கனவே மனத்தயாரிப்புச் செய்து வைத்திருப்பது அவசியம். அப்போது தான் சிறிதும் கவனம் பிசகாமல் மனிதன்தன் ஆற்றலை நேர்வழியில் செலுத்த முடியும்.

உலகத்தில் இருக்கும் பெரும்பாலானோர் எதிர்பார்த்தபடி வாழ்க்கை அமையப் பெறாதவர்கள் தான். ஆனால் அவர்கள் அதையும் இன்னோர் அனுபவமாக ஏற்றுக் கொண்டு தொடர்ந்து முயற்சி செய்து வெல்கிறார்கள். சில நேரங்களில் மனிதனின் எதிர்பார்ப்பைக் காட்டிலும் மேன்மையானதாக நிகழ்வுகள் அமைவது உண்டு. எதிர்பார்த்தவை நிறைவேறாவிட்டாலும் வாழ முடியும். வாழ்க்கையே பறிபோய் விட்டால் எதையும் சாதிக்க முடியாது.

செந்நாப்போதாரும்,

*முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை*
*இன்மை புகுத்தி விடும்.*

*தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்*
*மெய்வருத்தக் கூலி தரும்.*

முதலிய குறள்களில் இலக்கினை அடைய முயற்சியே மூலமாகத் திகழ்வது என்கிறார்.

வள்ளுவர் தெய்வத்தால் ஆகாதெனினும் என்று சொன்னார். அதற்குப் பொருள் தெய்வத்தால் முடியாதது என்பது அல்ல. இறைமை சில இடைஞ்சல்களை உருவாக்கித் தந்திருக்கிறது. அதை உடைத்து எறிகிற திராணியும், தெம்பும் மனிதனுக்கு இருக்கின்றதா என்று நிகழ்த்தப்படுகின்ற பரிசோதனை ஆகும். அவனுடைய வைராக்கியத்திற்கு வைத்திருக்கின்ற தேர்வு ஆகும்.

ஒரு தலைமுறை முழுமையாக உழைக்கத் தொடங்கினால், துவண்டு தலைக்குப்புறப் படுத்திருந்த பல நாடுகள் துள்ளிக் குதித்து நிமிர்ந்து நிற்கும் நிலையைக் காண முடிகின்றது.

ஹார்டுவாட் மேலாண்மைப் பல்கலைக் கழகம் நடத்திய ஆராய்ச்சியில் ஒரு முக்கியமான செய்தியைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஒருவரிடம், அவருடைய மேலதிகாரி உயர்ந்த எதிர்பார்ப்புகளை வைத்திருந்தால், அவர் அதை நிச்சயம் நிறைவேற்றியே தீருவார் என்பது தான் அவர்கள் கண்டுபிடித்த முடிவு. ஓர் ஆசிரியர் மாணவனிடம் நூறு மதிப்பெண்கள் பெறுவான் என்ற எதிர்பார்ப்பை ஏற்படுத்தினால், அந்த மாணவன் உந்துசக்தியோடு

செயல்பட்டு அந்த இலக்கை அடைவான். அதனால் தான் தொடக்கப் பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்கள் எதிர்மறையான சிந்தனை உடையவர்களாக இருக்கக் கூடாது. அவர்கள் நினைத்தால் மிகச் சாதாரண மாணவர்களைக் கூட உடற்சாகப்படுத்தி அவர்களுக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் ஆற்றல் ஒளிர்ந்து மணம்பரப்பச் செய்ய முடியும். இதற்கு பிக்மேலியன் தத்துவம் என்று அவர்கள் பெயர் வைத்திருக்கிறார்கள்.

சின்னச் சின்ன வெளிச்சங்கள் என்ற நூலில் வெ.இறையன்பு ***இலக்கு*** என்ற தலைப்பில் சிறுகதை ஒன்றைப் பகிர்ந்துள்ளார். அச்சிறுகதையில் குரு தன் சிஷ்யர்களிடம் ஒரு வைரம் பாய்ந்த தேக்கு மரத்தைக் காட்டி இதனில் என்ன செய்யலாம்? என்று கேட்டார். அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதிரி சொன்னார்கள். ஒருவன் மட்டும் மௌனமாக இருந்தான். உனக்கு ஒன்றுமே தோன்றவில்லையா? என்று அவர் கேட்டார்.

அவன் சொன்னான் இது இதனைப் பயன்படுத்துபவர்களைப் பொறுத்தது. இழைக்க நினைத்தால் வேண்டிய மரச்சாமான்களாய்ப் பரிமளிக்கும்.

வாழ்க்கையும் அப்படித்தான் இழைப்பதும், பிளப்பதும் அவர்கள் கையில் ஆகும். இது போன்ற மனித வாழ்வின் இலட்சியமும் அவரவர் விருப்பத்திற்கேற்ப அமைகின்றது. நற்சிந்தனையில் தோன்றும் இலட்சியமே தனக்கும், பிறருக்கும் பயன்பட்டு நிற்கும். பிறருக்குத் துன்பம் இழைப்பதை இலக்காகக் கொண்டிருப்பவர்கள் அத்துன்பத்திலே உழன்று கொண்டிருப்பார்கள் என்பதே உண்மை. இதனைத்தான் முன்னோர் மனம் போல் வாழ்வு என்றனர்.

உயர்ந்த இலக்கை அடைவது என்பது ஒரேயடியாக நிகழ்வது இல்லை. ஒவ்வொரு அடியையும், ஒவ்வொரு நொடியையும், ஒவ்வொரு படியையும் உன்னிப்பாக உற்று நோக்குவதில் அது அடங்கியிருக்கிறது. இந்த நொடியைச் சரியாகப் பயன்படுத்தாமல் அடுத்த மணியை முழுமையாகப் பயன்படுத்த முயலக் கூடாது. விழிப்புணர்வு இல்லாதவர்கள் இலக்கிற்கு வெகு தொலைவில் இருக்கிறார்கள்.

பலருக்கு இலக்கினை அடைய வேண்டும் என்கிற ஆர்வம் இருக்கிறது. ஆனால் எங்கிருந்து தொடங்குவது என்கிற தயக்கமே தடையாக இருக்கிறது. அடுத்தவர்கள் முன் வந்தால் ஊக்கத்திற்கு அது விடையாக இருக்கிறது.

இளைஞர்களுக்குச் சிறிய வயதில் நிறைய ஆலோசனைகள் கிடைக்கும். வளர வளர பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு அதிக வழிகள் கிடைப்பதில்லை. காரணம் பயம் ஆகும். சின்னக் குழந்தைகள் நம்மைப் பற்றி அடுத்தவர்கள் என்ன நினைத்தால் என்ன என்று எதற்கும் கவலைப் படாமல் துணிவுடன் தங்கள் பதில்களைக் கூறுவார்கள். வயதானவர்களோ, நாம் சொல்வதைக் கேட்டு மற்றவர்கள் சிரித்தால் என்னாவது, ஏளனம் செய்தால் அசிங்கமாயிற்றே, கேலி செய்தால் நம் கௌரவம் போய் விடுமே என்று எண்ணிக் கொள்கிறார்கள். இப்படி நமக்குள்ளேயே தணிக்கை செய்து விஷயங்களை வெளியே அனுப்புவதால் நல்லவை தங்கி, பிற வெளியேறுகின்றன.

பெரிய இலக்கினை, சின்னச் சின்னப் பகுதிகளாகப் பிரித்துப்பாக்க வேண்டும். வரிசையாக அவற்றை ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும். பிறகு வரிசையாக அவற்றைத் தீர்க்க ஆலோசனைகளில் சிறந்த ஆலோசனையைச் செயல்படுத்த வேண்டும். அப்போது தான் மலை போன்ற இலக்கினையும் எளிதில் அடைய முடியும்.

மகத்தான இலக்கினைச் சரியாகத் திட்டமிடும் போது பாதி நிறைவேறியதாகப் பொருள்; பிறகு அதை ஆர்வத்துடனும் மகிழ்ச்சியுடனும் செய்ய வேண்டும். செயலைச் செய்யும் போதே மகிழ்ச்சி ஏற்பட வேண்டும்; தவிர, செய்தபிறகு மகிழ்ச்சி வரும் என்று எண்ணக் கூடாது.

எந்தச் செயலையும் ரசித்துச் செய்யும் போது, ஈடுபாட்டோடு செய்யும் போது, அனுபவித்துச் செய்யும் போது அது நல்ல அனுபவமாகிறது. அந்தச் செயலை இயந்திரமாகவோ, செய்தே ஆக வேண்டும் என்னும் கட்டாயத்திற்காகவோ செய்யும் போது எவ்வளவு உயர்ந்த விஷயமும் ஒருகசப்பான அனுபவமாகிறது என்கிறார் சுகிசிவம். இலட்சியத்தை அடையவிடாத தடைகளை ஜே.கிருஷ்ணமூர்த்தி ஓர் அழகான சம்பவத்தின் மூலம் குறிப்பிடுகின்றார்.

ஒரு சமயம் ஒரு மனிதன் நிலவின் அழகையும், அதன் மெல்லிய கிரணங்களையும் புரிந்து கொள்ள ஆசைப்பட்டான். எனவே வெளியே வானத்தைத் தரிசித்து நின்றிருந்தான். அப்போது வானத்திற்கும் அவனுக்கும் இடையே ஓர் அழகிய மரம் மெல்லிய கிளைகளுடன், நறுமணம் வீசும் மலர்களுடன் நின்றது. அவன் நிலவை மறந்துவிட்டு அந்த மரத்தின் கிளைகளையும், இலைகளையும், பூக்களையும் ஆராய ஆரம்பித்தான். அவன் இதுவரை எந்த மரத்தையும் இவ்வளவு கூர்மையாகப் பார்த்ததில்லை. அவன் அவற்றை ரசித்துக் கொண்டிருக்கும் போதே நிலவு மறைந்து பொழுது புலர ஆரம்பித்துவிட்டது.

மனிதர்கள் பெரும்பாலானோர் ஏறத்தாழ அந்த மனநிலையில் தான் இருக்கின்றனர். இலக்கைத் தொலைத்துவிட்டுப் பாதி வழியிலேயே வேறொன்றில் கவனம் செலுத்த ஆரம்பித்து விடுகின்றனர். அதற்குள் அவர்கள் தேடி வந்த நிலவு மறைந்து விடுகிறது; பார்க்க வந்த பறவை பறந்து விடுகின்றது.

நாய் வாய் வைத்தது போல என்று பழமொழி ஒன்றுள்ளது. அதைப் போலத்தான் மனிதன் மனநிலையும் உள்ளது. மனிதன் பார்வை விழிப்புணர்வுடன் இல்லாவிட்டால் அவன் எதையுமே உணர முடியாது. விளக்கத்திற்கு அப்பாற்பட்டதாக வாழ்க்கை விரிகிறது. அதனை அனுபவம் என்று தான் சொல்ல வேண்டும்.

யாரேனும் இலக்கைப் பிறருக்காக உருவாக்கித் தர முடியாது. அதற்கான நடைப்பயணத்தை ஒவ்வொருவரும் தானாகத் தான் உருவாக்க வேண்டும்.

இளமை என்பது வைராக்கியத்தின் விளைநிலம்; அப்போது விதைக்கும் லட்சியங்களே இறுதிவரை நம்மை உயர்ந்த சிந்தனைகளை நோக்கி இழுத்துச் செல்லும் ஆற்றல் பெற்றவை. வைராக்கியத்துடன் வாழ்ந்தவர்களே, இன்று நாம் இருக்கும் உலகத்தின் தன்மையை மாற்றிக் காட்டினர்.

மகாத்மா காந்திக்கு இளமையில் ஏற்பட்ட வைராக்கியமே, பலமுறை அவர் மரணத்தின் விளிம்புக்குச் செல்லும் அளவுக்கு உண்ணாவிரதம் மேற்கொள்ள வைத்தது. லெனின் கல்லூரியில் படிக்கும் போது

கணிதத் தேர்வுக்குத் சென்று கொண்டிருந்தார். அப்போது அவருடைய சகோதரர் அன்று மாலை தூக்கிலிடப்படப் போவதாகத் தகவல் கிடைத்தது. அந்த நிலையிலும் அவர் கணிதத் தேர்வை எழுதினார். அதில் அவர் பெற்ற மதிப்பெண் நூற்றுக்கு நூறு. ஆபிரகாம் லிங்கன் சின்ன வயதிலேயே அடிமை முறையை ஒழிக்க வேண்டும் எனச் சங்கல்பம் செய்து கொண்டார். அது அவர் உயிரைப் பறிக்கும் என்று தெரிந்தாலும் அவர் தம்முடைய வைராக்கியத்தைக் கீழே போட்டுவிடவில்லை. பகத்சிங், கட்டபொம்மன் போன்ற எண்ணற்ற வைரங்கள் வைராக்கியங்களால் ஒளிர்ந்ததை வரலாற்றுப் பதிவுகள் வாசித்துக் கொண்டுதான் இருக்கின்றன.

கடினமான இலக்குகளை நிர்ணயித்து அவற்றை அடையும் போது ஏற்படும் மகிழ்ச்சி வற்றாத நதியைப் போல நிரந்தரமானது. எதைச் சொன்னாலும் நான் செய்து காட்டுவேன் என்று துடிப்புடன் இயங்கும் இளைஞர்கள் இன்னும் இருக்கவே செய்கிறார்கள். அவர்களால் தான் இன்னும் உலகம் இருண்டுவிடாமல் இருக்கிறது. இது அறிவுரையல்ல; அனுபவ உரை.

## கண்ணதாசன் திரை இசைப்பாடல்களில் பண்பாட்டுக் கூறுகள்

பெ. குபேந்திரன், உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
நாச்சியப்ப சுவாமிகள் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோவிலூர்

உலகிலுள்ள பல பண்பாடுகளில் சிறந்ததும் முதன்மையானதும் தமிழ் மக்களின் பண்பாடு ஆகும். தமிழ் மக்களின் கலாச்சாரம், பண்பாடு இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் மற்றும் பல்வேறு நாடுகளில் பரவி இன்றைக்கும் நயமுடையதாக விளங்கி வருகிறது.

பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம் என்று கொள்ளப்படுகிறது. நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை என்றும் கொள்ளப்படுகிறது. திருந்திய பண்பாடும் நாகரிகமும் கொண்டு வாழ்ந்தவர்கள், வாழ்பவர்கள், வாழப்போகிறவர்கள் தமிழர்கள்.

தமிழர்கள் தங்களின் பெரும்முயற்சியினால் கிட்டும்

பொருள்களையே ஏற்று வாழ்ந்தனர். பிறரிடம் யாசிப்பதை இழிவாகக் கருதினர். அதே சமயம் ஊனமுற்றோர், பார்வையற்றோர், நோயாளிகள், முதியோர் தம்மிடம் வந்து யாசித்தால் அவர்களுக்கு உதவுதலைப் பேரறமாகக் கருதினர்; தமிழர்கள் கற்றோரைப் பெரிதாகப் போற்றினர், தமிழ்மக்கள் பார் போற்றும் நல்வாழ்வு வாழ அவர்களின் பண்பாடும் நாகரிகமுமே காரணங்கள் ஆகும்.

ஒரு நாட்டின் பண்பாடு மற்றும் கலாச்சார வளர்ச்சிக்கு அந்நாட்டு ஆட்சியாளர்களின் திட்டமிடுதலும் மக்களின் கூட்டு முயற்சியுமே அடிப்படையாக அமைய முடியும். நாட்டு வளர்ச்சி என்பது தனிநபர், குடும்பம், சமூகம், சமுதாயம் என்ற படிநிலைகளின் கூட்டு முயற்சியாக மிளிரக் கூடியது. ஓர் இனத்தைச் சார்ந்த மக்களின் கொள்கைகள், கோட்பாடுகள், நோக்கங்கள், இலட்சியங்கள், வாழ்க்கை முறைகள், பழக்க வழக்கங்கள், சமூகச் சட்டங்கள், சமயங்கள், வழிபாடுகள், முறைகள், களவொழுக்கம், கற்பொழுக்கம், அகத்திணை மரபுகள், புறத்திணை மரபுகள், இலக்கிய மரபுகள், அரசியல் அமைப்புகள், ஆடை அணிகலன்கள், திருவிழாக்கள், உணவு முறைகள், பொழுதுபோக்கு, விளையாட்டுகள் ஆகியவற்றைப் பண்பாட்டு நாகரீக அடிப்படைகளாகக் கொள்ளலாம்.

பன்னெடுங்காலத்திற்கு முன்பே சீரும் சிறப்பும் பெற்றுச் சிறந்தோங்கிய இனம் தமிழினம். ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே நிலையான சமூக அமைப்பும் நிகரில்லா நாகரீகமும் தமிழினம் கொண்டிருந்ததாகவும் உலகின் அனைத்துப் பண்பாட்டிற்கும் அதுவே முன்னோடி என்றும் ஆய்வுகள் தெளிவாக எடுத்துக் கூறுகின்றன.

தமிழரின் பண்பாட்டு நாகரீகக் கூறுகளை ஆய்வு செய்ய இலக்கியப் பதிவுகள் துணை புரிகின்றன. பழங்கால இலக்கியப் பதிவுகளும் தற்கால இலக்கியப் பதிவுகளும் தமிழரின் பண்பாட்டை நாகரீகத்தை அறிய உதவுகின்றன.

தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்த இருபதாம் நூற்றாண்டின் ஈடு இணையற்ற கவிஞர் கண்ணதாசன்; இவரது படைப்புகளில் சமூகம் சார்ந்த பண்பாட்டு நாகரீகக் கூறுகள் பதிவு செய்யப்பெற்றுள்ளன. இவற்றை இக்கட்டுரை எடுத்துரைக்கின்றது.

பண்பாட்டு மகுடம் :-

பண்பாட்டின் தொடக்கம் மனித இனம் குழுவாக இருந்த போது ஏற்பட்டது. மனிதன் காடுகளை அழித்து நாடுகளாக உருவாக்கித் தனக்கென ஒரு நாகரீகத்தை தோற்றுவித்தான். தமிழகத்தில் சங்க காலத்திலிருந்தே இப்பண்பாடு மக்களின் வாழ்விலும் இலக்கியங்களிலும் நிலை பெற்றிருந்தது. பண்பாடு என்பது

பண்பு எனப்படுவது பாடுஅறிந்து ஒழுகுதல்
அன்பு எனப்படுவது தன்கிளை செறாமை (கலித்தொகை 133)

என்று கலித்தொகை சுட்டிக்காட்டுகிறது; பண்பாடு இன்றேல் உலகம் இல்லை என்பதைப்

பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுவின்றேல்.
மண்புக்கு மாய்வது மன் (குறள் எண் 996)

என்று திருவள்ளுவர் குறிப்பிடுகிறார்.

இன்றைய காலகட்டத்தில் நேர்மையுணர்வுகள், உண்மையுணர்வுகள், அழகுணர்வுகள், மகிழ்வுணர்வுகள் போன்றவற்றுடன் இணைந்த மனித உணர்வுகளையும் கலாச்சார நிகழ்வுகளையும் மற்றவர்களோடு பகிர்ந்து கொள்வதே தமிழ்ப் பண்பாடாகக் கொள்ளப்படுகிறது.

கண்ணதாசன் பாடல்களில் பண்பாட்டின் நிலை

நாள் தோறும் அன்பினாலே
பண்புடன் வாழ்வோம் ஆகா
ஜோடி புறாக் கூட்டங்கள் போல்
விந்தைகள் காண்போம்
(கண்ணதாசன் திரையிசைப் பாடல்கள். தொகுதி - 5 ப - 100)

என்று ஜெய கோபி என்னும் திரைப்படத்தில் எடுத்துரைக்கிறார். புறாக்களின் கூட்டத்தில் உள்ள ஒற்றுமை போலப் பண்பாட்டுடன் ஒன்று பட்ட சமுதாயமாகக் குடும்பத்தார் இணைந்து வாழும் வாழ்க்கை பண்பாட்டு வாழ்க்கை ஆகின்றது.

ஒட்டு மொத்தத் தமிழ்ச்சமூகமே பண்பாடு என்பதற்குச் சிறந்த சான்றாகத் திகழ்கிறது. அனைத்து நிலைகளிலும் ஒன்றிணைந்து செயலாற்றும் பண்பே சிறந்த பண்பாடு எனக் கண்ணதாசன் மனதாரக் காட்டுகிறார். அது தமிழர்களிடம் உள்ளது என்பதற்குப் புறாக்களின் கூட்டம் சான்றாகக் காட்டப்படுகிறது.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் என்பது தமிழரின் தலைசிறந்த பண்பாடுகளில் ஒன்றாகும்; இதனை

இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு (திருக்குறள் 212)

என்ற திருக்குறளின் வழியாகத் திருவள்ளுவர் புலப்படுத்துகிறார். திருவள்ளுவர் இல்வாழ்வில் பொருட்களைப் போற்றிப் பாதுகாப்பதன் பயன் தனது வீடு தேடி வந்த விருந்தினரைப் பேணி உபகாரம் செய்தற் பொருட்டே ஆகும் என்று கருதுகிறார்.

வேளாண்மையில் கிடைக்கும் விளை பொருட்களை உழவர்கள் தம் உறவினர்களுக்கு மட்டுமல்லாது தன் வீடு தேடி வருபவருக்கும் பகிர்ந்தளித்துப் பேணி உபசரித்து அனுப்புவர். இது பண்டைய மரபு. இம்மரபு இன்னும் தொடர்கிறது. உறவிகளின் சிறப்பைக் கண்ணதாசன் தன் பாடலில்.

எத்தனை பிறப்பிலும் இத்தனை உறவும் – என்
அருகினில் இருந்திட வேண்டுகிறேன்
(க.தி.இ.பா.தொ. 4 ப – 60)

என்று அடுக்கு மல்லி என்னும் திரைப்படத்தில் உறவுகளைப் பேண ஏங்கித் தவிக்கும் ஒரு மனிதனின் சிறப்பினைப் பாடி ஆயிரம் ஆண்டுகள் வாழ வேண்டும் என்றும் அத்தனைப் பிறப்பினால் கிடைக்கும் உறவின் மேன்மையையும் விளக்குகிறார் கண்ணதாசன்.

உறவுகளை விருந்தோம்பிக் காக்க இயலும். ஒவ்வொரு விழாவிலும் தமிழர்களிடத்தில் உணவு என்பது முக்கியமானது. அவ்வகையில் உறவினரைப் பேணிக்காக்க விருந்தோம்பல் சிறந்த பண்பாக விளங்குகிறது.

**நம்பிக்கைகளும் சடங்குகளும் :**

பழங்காலந்தொட்டு எல்லா இன மக்களிடத்தும் நம்பிக்கைகள் நிலவி வருகின்றன. நம்பிக்கைகளும் சடங்குகளும் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் வழிவழியாகப் பின்பற்றப்படுவனவாகும். நம்பிக்கைகள் ஒரு

தலைமுறையினரிடமிருந்து மறுதலைமுறையினருக்கு வழிவழியாகக் கடத்தப்படுகின்றன. நம்பிக்கைகளின் அடிப்படையில் மனிதன் வாழும் வாழ்க்கை முறைக்கென்று சில சட்டதிட்டங்களை வகுத்து அவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுகிறான். இந்நம்பிக்கைகளும் பண்பாடுகளாகக் கொள்ளத்தக்கன.

மனிதன் கொண்ட நம்பிக்கையினை

காற்று வந்தால் மரமசையும் காற்றைக் கண்டதுண்டா?
வீதி எங்கும் புல்முளைக்கும் விதையைக் கண்டதுண்டோ?
கடலின் நீரை மேகம் வாங்கும் கண்கள் பார்த்ததண்டோ?
உடலுக்குள்ளே உள்ளமுண்டு உருவம் அங்கு உண்டோ?
(க.தி.இ.பா. கொ. - 5 ப - 439)

என்று ஷண்முகப் பிரியா என்னும் திரைப்படத்தில் கடவுள் நம்பிக்கை கொண்டிருக்கும் மக்களைப் பார்த்து ஊக்கப்படுத்தும் விதமாகப் பாடல் பாடியுள்ளார்.

**பிறவி பற்றிய நம்பிக்கை :**

நம் முன்னோர்கள் தம்மால் இயன்றவரை பிறருக்கு உதவி செய்தல் வேண்டும் என்ற மனப்பான்மையைக் கொண்டவர்கள். இப்பிறவியில் நன்மை செய்தால் மறுபிறவியிலும் நல்லது நடக்கும் என்று நம்பி மக்கள் தான தர்மம் செய்ய முன் வந்தனர். ஆனால் கண்ணதாசன் கூறும் போது இப்பிறவியில் நன்மை செய்தால் இப்பிறவியிலேயே கடவுளுக்கு நிகராக மாறலாம் என்று கூறுகிறார்.

இதனை

குணமிருந்து மனமிருந்தால்
கடவுளாக மாறலாம் (க.தி.இ.பா. தொ - 2 ப - 338)

என்று கடவுளைக் கண்டேன் என்னும் திரைப்படத்தில் வேண்டிய நற்செயல்களையும் பட்டியலிட்டிருப்பதைக் காணமுடிகிறது.

இவ்வாறு கூடிவாழ்தலும், விருந்தோம்பி உறவுகளைக் காத்தலும், கடவுள் நம்பிக்கையோடு இருத்தலும் தமிழரின் பண்பாடுகளாகக் கண்ணதாசனால் காட்டப்பெறுகின்றன.

# பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்

*TALES AND PARABLES* - என்ற ஆங்கில நூலிலிருந்து தமிழில் தருபவர்

பேராசிரியர் மு. பழனி இராகுலதாசன்.

1

ஒரு கிராமத்து ஆள், வேறு ஓர் ஊரில் நாடகம் நடைபெறுகிறது என்று கேள்விப்பட்டு நாடகம் பார்க்கப்போனான். போகிற இடத்தில் சிறிது ஓய்வெடுத்துக் கொள்ள வசதியாக ஒரு சிறிய பாயும் கொண்டு போனான். நாடகம் நடக்கும் இடத்திற்குச் சென்று பார்த்தபோது, நாடகம் இன்னும் ஆரம்பிக்கப்படவில்லை என்று தெரிந்தது. எனவே கொஞ்ச நேரம் ஓய்வு எடுத்துக் கொள்ளலாமே என்று நினைத்தான். மைதானத்தின் ஓரமாய் ஓர் இடத்தில் பாயை விரித்துப் படுத்துக்கொண்டான்; படுத்தவன் அப்படியே தூங்கிவிட்டான்.

தூங்கி எழுந்து பார்த்தான்; ஆள், அரவம் எதுவும் இல்லை ; என்ன, ஒன்றையும் காணோமே, நாடகம் நடந்ததா என்று விசாரித்தான். அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள், நாடகம் நடந்து முடிந்து விட்டது! என்று சொன்னார்கள்.

வேறு என்ன செய்வது ? பாயைச் சுருட்டிக் கையில் வைத்துக் கொண்டு திரும்பிவிட்டான்!

2

துர்கா பூஜை செய்வதில் மிகவும் விருப்பமுடைய ஓர் ஆள் இருந்தான். பூஜையை அவன் மிகவும் ஆடம்பரமாகவும் ஆரவாரத்துடனும் செய்வான். புதிய ஆடை ஆபரணங்கள், கச்சேரி, களியாட்டங்கள் என்று பூஜை பிரமாதமாக நடக்கும். சிறப்பு நிகழ்ச்சியாக நாள் முழுதும் ஆடுகள் வெட்டப்பட்டு பூஜை வெகுபிரமாதமாக நடைபெற்றது. இப்படியாகச் சில ஆண்டுகள் கழிந்தன ; ஓர் ஆண்டின் பூஜை நிகழ்வின்போது ஆடுகள் வெட்டுவது நிறுத்தப்பட்டுவிட்டது. மக்கள் மிகவும் ஆச்சரியப்பட்டனர்; துர்கா பூஜையில் ஆடுகள் வெட்டப்படுவதை இப்படி நிறுத்திவிட்டாரே, உயிர்கள் மீது எவ்வளவு இரக்கம் ! எவ்வளவு கனிவு ! எவ்வளவு பரிவு ! என்ற வியந்துபோன பொதுமக்கள் சிலர் அந்த பூஜைக்கார ஆசாமியைச்

சந்தித்துப் பேசினர். அப்போது அவர் சொன்னார். வேறொன்றும் இல்லை ; பல் எல்லாம் விழுந்து போச்சு; ஆட்டு மாமிசம் சாப்பிட முடியவில்லை....

3

சாது ஒருவர் மக்களுக்கு அறிவுரை வழங்கிக் கொண்டிருந்தார் ; அந்த மக்களில் ஒருவராக, ஒரு கிராமத்து மனிதரும் இருந்தார். அவர் அந்த சாதுவிடம், சுவாமி, எனக்கும் ஏதாவது மொழிந்து அருள்புரிய வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அப்போது அந்த சாது, அந்தக் கிராமத்து மனிதரிடம், நீ, உன் நெஞ்சாரக் கடவுளை வழிபடு, கடவுளுக்கு அன்புசெய், போதும் என்றார். சற்றுத் தயங்கி நின்ற அந்தக் கிராமத்து மனிதர், கடவுளுக்கு நான் அன்பு செய்வதா? கடவுளை நான் எப்படி, எங்கே பார்க்க முடியும்? அப்படியே பார்த்தாலும் அவருக்கு எப்படி அன்பு செலுத்த முடியும்? என்று தயங்கித் தயங்கி மொழிந்தார்.

கிராமத்து மனிதரின் இயல்பான மொழிகளைப் புரிந்து கொண்ட சாது, நீ யார் மீதாவது பிரியமாக இருக்கிறாயா ? வீட்டில் யார் யார் இருக்கிறார்கள் ? என்று கேட்டார். அதற்கு அந்தக் கிராமத்து மனிதர், வீட்டில் வேறு யாருமே இல்லை ; வீட்டில் என்னுடன் ஒரே ஒரு ஆட்டுக்குட்டி மட்டும்தான் இருக்கிறது என்றார்.

கிராமத்து மனிதரிடம் சாது பின்வருமாறு மொழிந்தார் ; அப்படியா, நல்லது; நீ அந்த ஆட்டுக்குட்டியிடம் மேலும் மேலும் பிரியமாய் இரு, அன்புசெய் ; அப்படிச் செய்தால் அது கடவுளுக்கு அன்பு செய்த மாதிரி.

கிராமத்து மனிதர் போய்விட்டார் ; அந்த ஊருக்கு வந்திருந்த அந்தச் சாதுவும் வேறு ஊருக்குப் போய்விட்டார். பல நாட்கள் சென்றன ; அந்தச் சாது அவரது பிரயாணத்தை முடித்துக்கொண்டு. மீண்டும் வரும் வழியில் அந்தக் கிராமத்துக்கு வருகை தந்தார். அவரது வருகை பற்றி அறிந்த அந்தக் கிராமத்து மனிதர்கள் சாதுவைச் சந்தித்துப்பேசி ஆசி பெற்றனர். அந்த நீண்ட வரிசையில், கடைசியில் நின்ற அந்த ஏழை மனிதரும் வந்தார் ; வணங்கினார்.

சாது கேட்டார் : என்னப்பா மகிழ்ச்சியாக இருக்கிறாயா?

அந்த ஏழை மனிதர் மிகவும் பணிவாக, சாமி, நான் மிகவும் சந்தோஷமாக இருக்கிறேன், நீங்கள் சொன்னபடியே, கடவுளுக்கு அன்பு செய்கிறேன். கடவுளிடம் பேசுகிறேன்..... என்றார். மிகவும் வியந்தபடியே அந்தக் கிராமத்து ஏழை மனிதரைச் சாது உற்றுப் பார்த்தார். அந்தக் கிராமத்து மனிதர் தொடர்ந்து சொன்னார் :-

சாமி நீங்கள் சொன்னபடியே, என்னோடு இருக்கிற ஒரே ஒரு ஆட்டுக்குட்டியை நன்றாய்க் கவனித்துக் கொள்கிறேன்; வெளியே கூட்டிச் செல்கிறேன்; குளிப்பாட்டி விடுகிறேன்; அதனோடு பேசுகிறேன், பக்கத்தில் வைத்துக் கொள்கிறேன்...... இப்போது நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன்....

**4**

கணவனும் மனைவியுமான இருவர், ஊரைவிட்டுப் புறப்பட்டு வழிபாட்டுத் தலங்களைத் தரிசிப்பதற்காக ஆன்மிகப் பயணம் மேற்கொண்டிருந்தார்கள். வழியில், பாதையில் ஒரு வைரக்கல் கிடந்தது; கணவர் அதைப் பார்த்துவிட்டார். அடடே, இது வைரக்கல் அல்லவா, ஒரு வேளை மனைவி இதைப் பார்த்துவிட்டால், ஆசைப்பட்டுவிடுவாள்; ஆகையால் வைரக்கல் அவள் கண்ணில் பட்டுவிடாமல் மறைத்துவிட வேண்டும் என்று கருதி, காலால் சிறிது மண்ணை நகர்த்தி அந்த வைரக்கல்லை மறைத்தார். கணவர் ஏதோ ஒரு முயற்சியில். ஈடுபட்டிருக்கிறாரே, என்று உணர்ந்த மனைவி, என்ன செய்கிறீர்கள்? என்று கேட்டார். சிறிது தயங்கியபடியே, கணவர், வேறு ஒன்றுமில்லை, வழியில் ஒரு வைரக்கல் கிடந்தது, அது உன் கண்ணில் பட்டுவிடக்கூடாதே என்று கருதி, காலால் மண்ணை நகர்த்தி மூடினேன் என்றார்.

மனைவி சிறிது சிரித்தவாறே சொன்னார்; ஓ அப்படியா! மண் எது, வைரக்கல் எது என்று வித்தியாசம் பார்க்க இப்போதும் உங்களால் முடிகிறது!

*(தொடரும்...)*

## பொய் தவிர்த்தல் இறையருளுக்கு உதவும்

டி.ஆர். குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர், வணிகவியல் துறை,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.

பொய் தவிர்த்தல் நமது அடிப்படைக் கடமையாகும். பொய் எதிர்மறைச் சிந்தனை, செயல் ஆகியவற்றின் அடிப்படையாகும். பொய் மனஅமைதியைக்குலைக்கும். மனதிற்கு எப்பொழுதும் ஒருவிதமான பயத்தையும், நெருடலையும் உருவாக்குகின்றது. மனஅழுத்தத்தையும் தருகின்றது. நமது செயலின் மீதான கவனத்தைக் குறைக்கின்றது. அன்றாடச் செயல்களைச் சிறப்பாகச் செய்வதற்குப் பொய் பெருந்தடையாக உள்ளது. நமது நேர்மையின்மையின் விளைவு பொய்யாக மாறுகின்றது. நாம் அன்றாடம் அறவழியில் வாழ்வதற்குப் பொய் தவிர்த்தல் அவசியப்படும் போது, இறையருள் பெறுவதற்குப் பொய்யை முழுவதுமாகத் தவிர்க்க வேண்டும். பொய் தவிர்த்தல் இறையருளுக்கான வழி என்பதை உணரவேண்டும். திருவாசகத்தில் எந்தெந்தப் பாடல்களில் பொய்தவிர்த்தல் வலியுறுத்தப்பட்டுள்ளதோ அவற்றைத் தொகுத்துத் தகுந்த விளக்கங்களுடன் இக்கட்டுரை தரப்பட்டுள்ளது.

இறைவனைத் தொழுவதற்குக் கோவில்களுக்குச் செல்லுகின்ற போது, மனதில் பொய்கள் இருக்கக்கூடாது. நாம் பொய்களை மறைப்பதால் இறைவன் உண்மையை உணராமலா இருப்பான்? இறைவனின் ஆலயம் என்பது உண்மையின் கூடாரம் ஆகும். மனமும் உண்மையின் கூடாரமாக இருப்பின் அங்கே இறைவன் வந்து குடிகொள்வான். இறைவனை வணங்கும் போது பொய் தவிர்த்தல் குறித்து, திருச்சதகத் தலைப்பில் மாணிக்கவாசகர் கீழ்க்காணும் பாடல்களைத் தந்துள்ளார்.

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து உன்விரையார் கழற்கு என்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்த்து உன்னைப் போற்றி! சயசய போற்றி!
என்னும்
கைதான் நெகிழவிடேன் உடையாய்! என்னைக் கண்டுகொள்ளே –
திருச்சதகம்
பக்தி வைராக்கிய விசித்திரம்

மெய் அரும்பிச் சிலிர்த்துக் கைகளைத் தலைமேல் வைத்துக் கண்களில் நீர்ததும்ப உள்ளத்தில் பொய் தவிர்த்து உன்னைப போற்றி வணங்குகின்றேன். உன்னை வணங்கிய கைகளை நெகிழவிடமாட்டேன். உடையவனே! என்னைக் கண்டுகொள் என மாணிக்கவாசகர் இறைவனிடம் வேண்டுகிறார். இப்பாடலில் உள்ளம் பொய்தான் தவிர்த்து என்பது குறிப்பிடத்தக்கது. இறைவனைத் தொழும்போது பொய்தவிர்த்தல் அவசியம் என்பது இப்பாடல் நமக்கு உணர்த்துகின்றது.

யானே பொய் என்நெஞ்சும் பொய் என்அன்பும் பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே -
திருச்சதகம், ஆனந்தப் பரவசம்

என மாணிக்கவாசகர் குறிப்பிட்டுள்ளார். இதன் பொருள் என்ன? என் அன்பும் பொய்யாக உள்ளது. என் நெஞ்சும் பொய்யாக இருக்கின்றது. நானும் பொய்யனாக உள்ளேன். ஆனால் அழுதால் உன் அருளைப் பெறலாம் என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார். நாம் பொய்யிலிருந்து விலகி, உள்ளத்திலும் அன்பிலும் பொய்யைத் தவிர்த்து இறைவனிடம் நம்மைச் சமர்ப்பணம் ஆக்குவது அழுதால் என்கிற வார்த்தையின் பொருளாகக் கொள்ளலாம். இறைவனிடம் நம்மைச் சரணாகதி ஆக்கிக்கொள்ளல் ஆகும். பொய்களிலிருந்து விலகுவதற்கு இறைவனிடம் வேண்டி அழுதால் இறையருள் கிட்டும்.

அற்புதப்பத்து என்கிற தலைப்பில், மாணிக்கவாசகர்,

பொய்எலாம் விடத் திருவருள் தந்து தன் பொன்அடி இணைகாட்டி
மெய்யன்ஆய் வெளிகாட்டி, முன்நின்றதோர் அற்புதம்
விளம்பேனே!

எனக் குறிப்பிடுகின்றார். நான் அனைத்துப் பொய்களிலிருந்தும் விலகிவிடுவதற்கு இறைவன் அருள்புரிந்து தமது பொன்னான திருவடிகளை எனக்குக் காட்டி என்னை மெய்யனாக ஆக்கிய அற்புதம் அறியேனே என்கிறார் மாணிக்கவாசகர். பொய்களை நீக்கினால் இறையருள் கிட்டும் என்பது அறியப்படுகின்றது.

மாணிக்கவாசகர் இறைவனிடம் மன்றாடி வேண்டுகின்றார்.

பொய் எல்லாம் விடவேண்டும் நான் போற்றி

வீடுதந்து அருளு போற்றி! நின் மெய்யர் மெய்யனே – திருச்சதகம்

மெய்யர் மெய்யனே. இறைவா பொய்களை விட்டு நான் வெளியேற வேண்டும். எனக்குச் சிவகதி தந்து அருள்வாயாக என இறைவனிடம் வேண்டுகின்றார். வீடுபெறுவதற்கு (சிவகதிப் பொய்களை விட்டு விலக வேண்டும் என்கிற புரிதல் திருவாசகத்தில் அறியப்படுகின்றது.

பொய்யினை உண்மையென்று நம்பி வாழ்பவர்கள், இம்மண்ணுலகில் வாழப் பொருத்தமில்லாதவர் எனக் கணிக்கப்படுவர். இதனை மாணிக்கவாசகர்,

பொருத்தம் இன்மையேன் பொய்ம்மை உண்மையேன் – ஆனந்த அதீதம் திருச்சதகம்

எனத் தன்னைக் குறிப்பிட்டுக் கொள்கின்றார். இதன் உட்பொருள் பொய்யை உண்மையெனக் கருதி, வாழ்தல் கூடாது என்பதாகும். பொய்யன் ஆன என்னை அப்பொய்யிலிருந்து மீட்டு விடுவித்து என்னை ஆட்கொண்ட மெய்யனே

பொய்யவனேனைப் பொருள்என<br>ஆண்டுஒன்று பொந்திக் கொண்ட மெய்யனே<br>விட்டிடுதி கண்டாய் – நீத்தல் விண்ணப்பம்

என மாணிக்கவாசகர் நீத்தல் விண்ணப்பத்தில் குறிப்பிடுகின்றார்.

பணம், தங்க வைர ஆபரணங்கள், நிலம், வீடு, தோட்டம் ஆகியவற்றை உண்மைஎன நம்பி அவற்றிற்குள்ளே அழுத்தமாகப் புகுந்து வாழ்ந்தேன். இவற்றையெல்லாம் பொய் என எனக்கு உணர்த்தி, இறையருளே உண்மையெனத் தெரிவித்து என்னை ஆட்கொண்ட ஐயா! என இறைவனைப் புகழ்ந்து

பொய்யாய செல்வத்தே புக்குஅழுந்தி நாள்தோறும்<br>மெய்யாக் கருதிக் கிடந்தேனை. ஆட்கொண்ட<br>ஐயா! என் ஆருயிரே! அம்பலவா!<br>– திருக்கோத்தும்பி

பொய்எல்லாம் மெய்என்று புணர்முலையார் போகத்தே

மையல்உறக் கடவேனை, மாளாமே காத்தருளி

தையல்இடம் கொண்டபிரான்

– அச்சோப்பதிகம்

என்று மாணிக்கவாசகர் பாடுகின்றார். இங்குக் குறிப்பிடப்படும் செல்வங்கள் நிலையற்றவை. பொய்மைத் தன்மை கொண்டவை. இறையருள் உண்மையான அனைத்தையும் தரும் என்பதும் அறியப்படுகிறது. அழியக்கூடிய, தேயக்கூடிய, கழியக்கூடிய செல்வங்களில் கவனம் செலுத்தாது இறையருளில் கவனம் செலுத்த வேண்டும்.

நம்மிடம் பொய்கள் பெருகும் போது நன்றாக உழைப்பதற்கான நேரம் சுருங்கிவிடும். பொய்களின் பின்விளைவுகளைப் பற்றியே மனம் நினைத்துக் கொண்டிருக்கும். உழைப்பில் கவனம் செலுத்த உதவாது. இவ்விதம் இருப்பவர்களைப் புலையன் என மாணிக்கவாசகர் குறிப்பிடுகிறார். மாணிக்கவாசகர் அனைத்துக் குறைகளையும் தம்மேல் போட்டுக்கொண்டு. இத்தகு குறையுடையேனை இறைவா! எவ்விதம் நீ ஆட்கொண்டாய் எனவும் கேட்டுக் கொள்கிறார். மாணிக்கவாசகர் சுட்டிக்காட்டும் குறைகளை நாம் தவிர்க்க வேண்டும் என்பது இங்குப் பொருளாக எடுத்துக் கொள்ள வேண்டும். இதனை மாணிக்கவாசகர் பிடித்தபத்து என்கிற தலைப்பில்

பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச்சுருக்கும்

புழுத்தலைப் புலையனேன் தனக்குச்

செம்மையே ஆய சிவபதம் அளித்த

செல்வமே! சிவபெருமானே!

எனக் குறிப்பிடுகின்றார்.

என் உள்ளத்துப் பொய்கள் எல்லாம் பொடிஆகி அழிந்துவிட நான் என்ன செய்கேன் என மாணிக்கவாசகர் வினவ, வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்உருகிப் பொய்யும் பொடியாகாது என்செய்கேன்? அதற்குப் பதிலும் தருகின்றார்.

பொய்யாயினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே

இந்த உலகத்தில் பொய்என அடையாளம் காணப்படும் அனைத்தும், இவ்வுலகத்தை விட்டு அகல்வதற்கு மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரான இறைவன் இருக்கின்றான். இறைவனை உளமார வணங்கினால் பொய்கள் நம்மை விட்டு நீங்கி, மெய்ஞ்ஞானம் பெருகும். இறையருள் கைகூடும்.

*திருச்சிற்றம்பலம்; வாழ்க வளமுடன்; ஓம் சிவாய நம!*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## இசை வாது வென்றது

பாண்டியன் வரகுணன் சிவலோகம் சேர்ந்த பின் அவனது குமாரன் ராஜராஜ பாண்டியன் சிம்மாசனம் ஏறினான். நாட்டை நல்ல முறையில் ஆண்டு வந்தான். அவனுக்கு அரசகுலத்தைச் சேர்ந்த மனைவிமார்கள் பலரும், காமக்கிழத்தியர் பலரும் இருந்து வந்தனர். காமக்கிழத்தியர்களுள் ஒருத்தியிடம் பாண்டியன் தன் உயிரையே வைத்திருந்தான். அவள் கீதம் பாடுவதிலே வல்லவளாக விளங்கினாள். அவளுக்கும் பாணபத்திரனுடைய மனைவிக்குமிடையே இசைக்கலைத் துறையிலே பகைமை ஏற்பட்டது. பாண்டியனது காமக்கிழத்திக்கு அது பொறுக்கவில்லை. ஆதலால் பாணபத்திரனின் மனைவிக்கு எதிராக ஒரு பாண்மகளைப் பாடவிட்டு அவளது கருவத்தை அடக்க வேண்டும் என்று கருதினாள். தன் கருத்தைப் பாண்டியனிடம் தெரிவித்தாள்.

தனது காமக்கிழத்தி சொல்லிய வண்ணம் செய்யும் இயல்புடையவன் பாண்டியன். ஆதலால், அவள் கருத்துக்கு இசைந்தான். இசைப் போட்டியிலே பாணபத்திரனது மனைவியை வெல்லும் தகுதியுடைய பாடினி ஒருத்தியை ஈழ தேசத்திலிருந்து வருமாறு அழைத்தான். ஈழப் பாடினியும் பாண்டியன் சபைக்குப் பாண்மாணவியர் பலர் சூழ வந்து சேர்ந்தாள். அவள் கின்னரமாதர் போல நல்லிசை நயமுடன் மொழிந்தாள். பாண்டியன் மகிழ்ந்தான்.

காமக்கிழத்தியிடம் கொண்ட மோகத்தால் வரவிருக்கும் பழியைக் கவனிக்கமாட்டாத பாண்டியன், பாடினியே! நாளை நீ பாணபத்திரன் மனைவியை எமக்கு முன்னால் பாடுவதற்கு அழைப்பாய். அவள் மறுத்தாலும், நான் உன்னைத் தடுத்தாலும் நீ அவளைப் போக விடாதே. அவள் வெட்கமடையும்படி நீ போகாதே நில் என்று வஞ்சினம் கூறித் தடுத்துவிடு என்று கூறி அவளுக்கு வேண்டியதெல்லாம் வழங்கி, நாளை வருவாயாக என்று அனுப்பி வைத்தான்.

பின்னர் பாண்டியன் பாணபத்திரனது மனைவியைத் தனது அரண்மனைக்கு அழைத்து வரச் செய்தான். தனது உள்ளும் புறமும் வேறுபட்ட நிலையிலிருந்து பாடினியே! ஈழத்திலிருந்து இசையிலே வல்லவள் ஒருத்தி வந்திருக்கிறாள். தன்னோடு பாட யாராலும் முடியாது என்று கருவப்பட்டுக் கொண்டிருக்கிறாள்; அவளுக்கு இணையாக நீ பாடமுடியுமா? சொல் என்று கேட்டான். அரசே! சோமசுந்தரப் பெருமானின் திருவருளாலும் எனது கற்பின் திறத்தினாலும் அவளோடு போட்டுயிட்டுப் பாடி வெல்வேன் என்ற நம்பிக்கை உள்ளது. தோற்றுப் போனாலும் மனம் கலங்கமாட்டேன் என்று சொன்னாள். பாண்டியன் அவளையும் மறுநாள் வரும்படி பணித்தனுப்பிவிட்டான்.

மறுநாள், ராஜராஜ பாண்டியன் ஈழத்துப் பாடினியையும் பாணபத்திரன் மனைவியையும் தனது சபைக்கு வரவழைத்தான். ஒருவரையொருவர் எதிர்த்து இருக்குமாறு நேர் நேராக அமர்த்தினான். பாண்டியன் அவர்களைப் பார்த்து யாழ் வாசிக்குமாறு கேட்பதற்கு முன்ன தாகவே, ஈழப் பாடினி பாணபத்திரன் மனைவியை இழிவாகப் பேசினாள். மேலும், இசைக் குற்றங்கள் எத்தனை? குணங்கள் எத்தனை? யாழுக்குரிய தெய்வம் யாது? என்றெல்லாம் பலவாறான வினாக்களை அடுகிக் கொண்டிருந்தாள். தன் வினாக்களுக்கெல்லாம் பத்திரன் மனைவி விடை தந்த பின்புதான் இசை வாதுக்கு வரவேண்டும் என்று வற்புறுத்தினாள்.

பாணபத்திரன் மனைவி கற்பில் சிறந்தவள் ஆகையால், பெண்ணே! நீ உனது கல்விப் பெருமையையும், வாதம் செய்யும் ஊக்கத்தையும், பலர் காமுறுகின்ற பெண்ணலச் செருக்கையும் பாண்டியன் அவையிலுள்ளோர் தெரிந்து கொள்ளும் பொருட்டு வாய் திறந்தாய் போலும்! நான் உன்னோடு இசைவாதுக்கு வந்திருக்கிறேனே யல்லாமல் வாய்திறந்து பேசும் போருக்காக அல்ல. உன்போன்ற மானம் விற்கும் பெண்தான் உனக்குச் சரி என்று கூறினாள். பாண்டியன் இடை புகுந்து அவர்கள், இருவரையும் விலக்குபவன் போல நடித்து, பெண்டிரே! வீண்பேச்சு எதற்கு? பாடத் தொடங்குங்கள். தோற்றுப் போனவர் வெற்றி பெற்றவருக்கு அடிமையாக வேண்டும் என்று சொன்னான்.

ஈழநாட்டுக்காரி யாழைத் தனது இடது தோளிலே சாய்த்துக்கொண்டு மீட்டிச் சுருதிகூட்டி ஏழிசையைப் பாண்டியன் செவிகளிலே பெய்தாள். அவ்விசை பாண்டியனுக்குத் தன் காமக்கிழத்தியின் பேச்சுக்கு நிகராக இனித்தது. பாணபத்திரனுடைய மனைவியும் யாழ் கூட்டி இன்னிசை வெள்ளம் பொழிந்து சபையோர் செவிகளிலே கானமுதம் செய்தாள். மன்னனது உள்ளக் கருத்தை அறியமாட்டாத சபையோர்கள் எல்லாம் பத்திரன் மனைவி பாடியதையே பாராட்டினார்கள். பாண்டியனோ ஈழமகளின் பாடலைத்தான் மெச்சினான். உடனே சபையோர்களும் தங்கள் கருத்தை மாற்றிக்கொண்டனர். மன்னவனோடு சேர்ந்து கொண்டு ஈழத்தவளின் கீதத்தையே மெச்சினர்.

மையலில் வீழ்ந்த பாண்டியன் நன்றும் தீதும் தெரியாத அறிவிலியானான். இந்த ஒரே நாளில் இசைவாதின் முடிவை அறிவது முடியாத காரியம் என்று கூறிப் பாடினியையும் பத்திரன் மனைவியையும் போக விடுத்தான்.

தனது மாணவியர்கள் புகழ்பாடிச் சூழ்ந்து வரஈழப் பாடினி தன் இருக்கை சேர்ந்தாள். தன் இசை கேட்டுப் பாண்டியன் வியந்ததையே

புகழ்ச்சி யெனக் கருதி கருவமும் களிப்பும் பொங்கக் கவலையின்றிப் படுக்கையின்மீது அமர்ந்தாள்.

பாணபத்திரன் மனைவியோ மிகுந்த கலக்கம் அடைந்திருந்தாள். திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானின் சேவடி வணங்கிக் கண்ணீர் சொரியவாடி நின்றாள். கடவுளே! ராஜராஜ பாண்டியன் பாரபட்சம் செய்கிறான். அவனது எண்ணத்தை ஒட்டியே அவையினரும் இருக்கின்றனர். நடு நிலைகாண்பார் யாரும் இல்லையே, இறைவனே! நான் என்ன செய்வேன்? தமியள் துன்பத்தைத் தேவரீர்தான் போக்க வேண்டும் என்று மனமுருகி வேண்டினாள். அப்போது மகளே! பயப்பட வேண்டாம்; நாளைக்கு நீயே வெற்றியடையும்படி செய்வோம், என அசரீரி வாக்கு எழுந்தது; அதைக் கேட்டு அமைதியும் உவகையும் கொண்ட பத்திரன் மனைவி தனது இல்லம் சென்று மகிழ்ச்சியோடு இருக்கலானாள்.

மறுநாள் வந்தது. பாண்டியன் தனது சபைக்கு இசைவாதுக்கான இருவரையும் அழைப்பித்தான். அவர்கள் இருவரும் பாடுவதைக் கேட்டபின் முதல்நாள் தான் கூறியது போலவே அன்றும் கூறினான். அது கேட்ட அவையினரும் பாண்டிய மன்னன் கருத்துக்கிணங்கியே ஓரவஞ்சனையாகக் கூறினார். பாணபத்திரன் மனைவி அதைக் கேட்டு மனம் புழுங்கி நின்றாள். ராஜராஜ பாண்டியனைப் பார்த்து, ராஜசிங்கமே! மனுநீதி தெரிந்த மன்னர் பெருமானே! நீவிர் ஒருதலைப் பட்சமாகப் பேசுவது கேட்ட சபையோர்களும் அப்படியே சொல்வதற்குத் துணிந்தார்கள். ஆதலால் நடுநிலை கொண்ட சோமசுந்தரப் பெருமானின் சன்னதி சேர்ந்து நாங்கள் இருவரும் பாடுவோம். இருவர் பாடுவதையும் எல்லாரும் கேட்கட்டும். யாராவது ஒருவர் மனம் துணிந்து இவள் வென்றாள் என்று சொன்னாலும் போதும் என்று செப்பினாள். அது கேட்ட பாண்டியன், நீங்கள் அவ்வாறே செய்யலாம் என்று சொல்லி விட்டான். சபை கலைந்தது. ஈழத்துப் பாடினியும் பாணபத்திரன் மனைவியும் தங்கள் தங்கள் வீடு சென்றனர்.

மூன்றாம் நாள் கீத ஞானம், இலக்கிய ஞானம், சுருதி ஞானம், தாள ஞானம் முதலிய கொண்ட. இசைப் புலவர்களும் தன் மந்திரிகளும் புடைசூழப் பாண்டியன் சோமசுந்தரப் பெருமான் திருச்சன்னதியை அடைந்தான். இசைவாதிடும் இருவரையும் அங்கே வரவழைத்தான். இன்று பத்திரன் மனைவி எனக்கு அடிமையாகி விடுவாள். இதிலே ஐயமில்லை என்று எண்ணி மிகுந்த கருவத்தோடு வந்தாள் ஈழமகள். தெய்வபக்தியும், கற்பும், கல்வியும் நிறைந்த பத்திரன் மனைவியோ அமைதியுடன் வந்தாள். சோமசுந்தரப் பெருமானும் இசைப் பெரும் புலவர்போல ஆபரணங்கள் பூண்டு கலைஞர் நடுவிலே எழுந்தருளியிருந்தார்.

முதன் முதலாக ஈழப் பாடினி வேத்திசை பாடினாள்; கூட்டத்திலே அமர்ந்திருந்த பெரியோர் எவரும் எதுவும் கூறாமல் இருந்தனர். அடுத்து, பாணபத்திரன் மனைவி பதுமாசனத்தமர்ந்து வீணை மீட்டி இன்னிசையை ஆராய்ந்து எழுப்பிப் பாடினாள். சொக்கநாதப் பெருமானுக்கு அர்ப்பணம் செய்து பெருந்தேவபாணி பாடினாள். மனங்கனிந்த முறையிலே முதல் தொழில் எட்டும் இசைக்கரணம் எட்டும் பொருந்திய யாழிசையோடு பாடலின்னமுத கீதம் பொழிந்தாள். உள்ளான கீதத்தை அமைதியுடன் தெளிவாகப் பாடினாள். இசையினைச் செவிமடுத்த அனைவரும் பேரானாந்தம் அடைந்தனர்.

ராஜராஜ பாண்டியனால் இம்முறை முன்போல முடிவு சொல்வதற்குத் துணிச்சல் கொள்ளவில்லை. சோமசுந்தரப் பெருமானின் திருவருளால் உளக்கொடுமை நீங்கியது. இருவர் கானத்தையும் சீர்தூக்கி ஆராய்ந்து பார்த்தான். நடுநிலைமை கொண்ட மனத்தோடு, பாணபத்திரன் மனைவியே வென்றவள் என்று தீர்ப்புகக் கூறினான். அப்படியே அரசன் வழிமொழிந்தனர் சபையினரும்; இசைவாதிலே அறுதியிட்டுக் கூறப்பட்ட முடிவினை எல்லாரும் ஏற்று மகிழ்ந்தனர். இசைப் புலவர்களோடு புலவராய் வீற்றிருந்த

சோமசுந்தரப் பெருமானும், ஆகா இது அற்புதம்! என்று சபையிலுள்ளோர் அனைவரும் கேட்கும் வண்ணம் மொழிந்து மறைந்தருளினார். பார்த்தோர் அனைவரும் பேராச்சரியம் அடைந்தனர். ராஜராஜபாண்டியன் பயத்தினால் நடு நடுங்கிப் போனான்.

சோமசுந்தரப் பெருமானின் திருவிளையாடலே இது என்று எல்லோரும் நன்கு புரிந்துகொண்டனர். சிவபெருமானின் திருவருளையும் பாணபத்திரன் மனைவியது பக்திச் சிறப்பையும் அனைவரும் எண்ணி எண்ணி இன்பம் எய்தினர்.

பாண்டியன் பின்னர் இசைவாதிலே வெற்றிபெற்ற பத்திரன் மனைவிக்கு முத்தாரங்களையும், பொற்கலங்களையும் பொன்னாடைகளையும் வரிசையாக வழங்கிப் பல சிறப்புகள் செய்தான். தன்னாலே வரவழைக்கப்பட்டவள் ஆகையால் தோல்வியுற்ற ஈழப் பாடினிக்கும் பரிசுகள் பல வழங்கிச் செல்லவிடுத்தான்.

ராஜராஜ பாண்டியன் குழுமியிருந்த அனைவருடனும் சென்று திருக்கோவிலில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளுக்கும் அரிய ரத்தினாபரணங்களைக் காணிக்கையாகக் கொடுத்தான். உளமார வழிபாடு செய்து, மன்னவர் வலிமை தெய்வங்களின் வலிமை முன் நிற்கமாட்டா; தெய்வங்களின் வலிமையெல்லாம் சிவபெருமான் வலிமை முன் நிற்கமாட்டா! என்று கூறி வியந்து போற்றினான். இறைவனைப் பிரதட்சிணம் செய்து பின்னர் அரண்மனை சேர்ந்தான்.

ராஜராஜ பாண்டியன் சுகுணன் என்ற நல்ல மைந்தனைப் பெற்று வாழ்ந்திருந்தான்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

## சனாதன உலகப் பல்கலைக் கழக அறநிலைக் கல்வி நிறுவனங்கள்

ஸ்ரீ ல ஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளி
போன் : 04565 235540

கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி
போன் : 04565 235510, 238219

நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி
போன் : 04565 233624

கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி
போன் : 04565 232221

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி
போன் : 04565 234523

கோவிலூர் மாடல் மாண்டிசோரிப் பள்ளி, ரிஷிகேஷ்
போன் : 0135 2436968

திருக்களர் ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளி,
திருக்களர், மன்னார்குடி வட்டம், திருவாரூர் மாவட்டம்.
போன் : 9600034634

ஸ்ரீ நாச்சியப்பர் மாண்டிசோரிப் பள்ளி, பொறவாசேரி
போன் : 04365 245753

அக்ஷரா மாண்டிசோரிப் பள்ளி, சிதம்பரம்
போன் : 04144 220030

நாச்சியப்ப சுவாமிகள் தொழிற்கல்வி (I.T.I)
போன் : 04565 233624

Thirumagal
04565 - 232991